உ

ஓம்:

# ஸ்ரீபொன்னம்பலஞானதேசிகர்
# ரித்திரச் சுருக்கம்.








ஸ்ரீபொன்னம்பலசுவாமிகள்

மடாலயத்தின்

வெளியீடு

...ந்த விலாச பிரஸ், சிதம்பரம்.

ஓம்.

மஹாகணபதியேநம:

# ஸ்ரீ பொன்னம்பலஞானதேசிகர் சரித்திரச் சுருக்கம்.

மலர் தலையுலகில் அவிர்சடைக் கடவுளும், அங்கயற்கண்ணியும், பங்கமில் குமரனும், சங்கத்தமர்ந்து தமிழாராய்ந்தும், அரியணையேறி யுலகதுபுரந்தும் குலவிய மாண்புடைப் பாண்டி நன்னாட்டில் ஒல்காப்பல்புகழ் மல்குநற்பதியாம் இராமநாதபுரத்தினைச் சார்ந்த 'அனுமந்தக்குடி' என்னும் சீரூரில் 'தொன்று நிகழ்ந்த தனைத்து முணர்ந்திடு சூழ்கலைவாணர்களும், என்று பிறந்தவ ளென்றுணராத வியல்பினளாகிய கன்னித்தண்டமிழ்த் தேவி, தனதியற்கை வனப்பின் மாட்சியால்மிளிர்ந்து சேர, சோழ, பாண்டியராதி அரசமணிகளை யறநெறிப்பாலூட்டி வீரமும் மேன்மையும் முறுகியெழவளர்க்க அவ்வரசமணிகள் அரசியனடாத்துங்கால், அவர்கட்கு அணுக்கத்தமர்ந்து அமைச்சர்களாயும், அடும்போரடர்த்ததிறவினராயும், புகர்முகவேழம்பொலி வீரராயும், பாய்மாவேறும்படையினராயுமிருந்து தமிழ்நாட்டைப்பல்வளங்களானும் மிளிரச்செய்து வாழ்ந்து "முதுகுலத்தார், முதுகுடிகள்" எனச்சங்கம் மருவிய பழந்தமிழ் நூற்களால் விதந்தோதப்பெற்ற பெற்றிவாய்ந்த "அகம்படியர்" என்னும் இந்திரகுலமரபிற்றோன்றி இவர்தந்தையார் பழையபோர்க்குணந் தோன்ற இவ்வாங்கிலவரசாங்கத்தாரிடமும் ராணுவத்திற் சேர்ந்துறையும் நாள் வடநாட்டுள்ள விஜயநகரில் கலியாண்டு சகூகூச கரவிூத்தில் இப்பெரியார் அவதரித்தனர். "பொன்னம்பலம்" எனநாமமிடப்பெற்று இவ்வருமகவு இளமையிலேயே பொறுமை முதலிய நற்றுங்குணங்களை யணிகலனாயணிந்து வளருங்கால்தனது இளமைப்பருவத்திலேயே தந்தையார் இம்மண்ணுலகை நீத்தாராக; இராகவனைக்கோசலைபோன்று இவ்வருமகவை யின மணி

வயிறுவாய்த்த "அங்கம்மாள்" என்னும் அருமைத்தாய் கண வனேநீத்ததுயர் இக்குழவியினேக்கண்டாறி அருமையாய் வளர்த்து ஐந்தாமாண்டிற் பள்ளி செலுத்தப் படித்து வருங்கால் எண்ணேதேய்த்து நீராடிவரும்படி தனக்குதவும் எண்ணேயினே தன்தலேயிற் றேய்த்துக்கொள்ளாது வறிதேதுநீராடி குளக்கரையின் அரசடி வீற்றிருக்கும் ஆனேயங்கடவுளார்க்கு அபிஷேகித்துப் பனிமலர்பறித்திட்டு அன்புதோய் மனத்தராய்க் கண்ணீரரும்ப வாயாரவாழ்த்தி வீடுறுவர்.

இங்ஙனம் நெடுநாளாற்றிவருங்கால் தனது மகவின்மேனி பசையற்று வறண்டிருப்பதைக் கண்ணுற்ற அன்னேயார் ஒருசாலேமாணுக்கராயபள்ளிச்சிறுர்கள்பால் இவன்செயல் கேட்டும் ஐயங்கொய்யாமனத்தராய் குழந்தாய்! உன்மேனி எண்ணேப் பசையறக் காண்டலின் காரணமென்னே? எனவினுவ, அம்மையார் முனிவுறுவரெனவஞ்சி அம்மே! சீக்காய் வறளத்தேய்த்து மூழ்கியதால் இங்ஙனமாயிற்றெனமொழிவர். அன்னேயார் இவன் செயலறிவாம், என 'சண்டேசுரர் தந்தையார்போன்று' ஒளிந்து நின்றுகண்காணித்தனர். முன்முறைப்படி இபமுகத்தெந்தைக்கு எண்ணேயிட்டுத்துநீராட்டி நனிமலர்தூஉய்க்கனிவுறுமொழியாற் பலதுதியியற்றி மெய்மயிர்பொடிப்ப உள்ளகமுவப்பத் திலகமண் டோய வீழ்ந்திறைஞ்சித்திரும்பினர். அன்னேயார்கண்டு இது காறுங்கூறிய பொய்மொழிக்காகக் கடுமொழிகளாற்காய்ந்தும் தனதிளவலின் கடவுட் பத்தியினருஞ்செயல்கண்டகநனிமகிழ்ந்தும், பொய்ச்சினத்தாற் கடிந்துரைகூறிஞராக; கலேகணிறைந்த உவாமதிபோன்று பதிஞருண்டு நிறைவுபெற்ற தவநனிதூண்ட 'கானவர்வலேயிற்பட்டுக் கைதப்பியோடுமான்போல், காசினிக் கண்ணேமாசறுதில்லேயிற் கண்டார்க்குமுத்தி யுண்டெனுமுரையைக்கருதருமறைகணனிவிதந்தோதத் தென்றிசைநோக்கி மன்றினிலாடும் மாமணிபாதந்தாமுறவெண்ணி பொன்னம்பலவன் பொன்னம்பலத்தை நண்ணிஞர்.' அங்குநண்ணி அம்பலத்தாடு மவிர்சடையரர்க்குப் பனிமலர்கொய்தீதல், திருவலகிடுதல், தீபங் துலக்கன்முதலிய அரும்பணியாற்றி ஆறுகாலதரிசனமுஞ்செய்துறையும்நாள் பக்தர்கட்கெய்ப்பில்வைப்பான பண்ணவன்

திருவருள்கூட்ட கோட்டையூரில், நகரதனவணிகமரபிலுதித்துத் தில்லைநகர்வதிந்துறைந்த ஸ்ரீ பெத்தாச்சியடிகளாரிடத்துச் சந்நியாசம்பெற்று திருவீதியில் அங்கையிற்பயிக்கமேந்திப் பசிப்பிணியாற்றி வைராகமாதி நறுங்குணங்கள் அணிசெய்ய பாம்பும் புலியும் பணிபுரிந்தடைந்த காம்பணியும் பணைத்தோளிபங்கன் றிருமுன் பிறவாநெறிவேண்டி அதனையடைதற்கான நெறிபுகலுத்தமவருட்குருவையணுகவருளல்வேண்டுமெனக் கம்பமுற்ற மெய்யும் கும்பலுற்ற கையுமுடையராய்த் துதித்துநிற்குங்கால் வேண்டுவார் வேண்டுவதையீயும் மெய்யன் பாண்டிவளநாட்டிற் கழனியம்பதியென்னுங் "கோயிலூரில்" குணங்குறிகடந்த கொண்டலாகிய ஸ்ரீ முத்திராமலிங்க இறையின் றிருவருட்பேறு பெற்ற தெள்ளியகேண்மைச் சிதம்பரதேசிகன் றிருவுளத்தின் கட்டோன்றி தில்லைத் திருநடங்காணும் அவாவினையெழுப்ப; அக் 'கருணாநிதி' யெனக் காரணநாமம்பெற்ற கண்ணியர் அடியவர் புடைசூழ பெரும்பற்றப்புலியூர் நண்ணிச் சஞ்சிதமகற்றுங் குஞ்சிதசரணன்றிருமுன் கூப்பியகரமுந் தேக்கிய அறமுமுடையராய்நிற்க; "ஒன்றியிருந்து நினைமின்க ளுந்தமக் கூனமில்லை, கன்றியகாலனைக் காலாற் கடிந்தா னடியவர்க்காய்ச், சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம்பலத்துநட்டம், என்றுவந்தாயென்னுமெம்பெருமான்றன் றிருக்குறிப்பே" எனக்கல்லைப்புணையாக்கடல்கடந்த திருநாவுக்கரையர் திருவாக்கிற்கண்டாங்கு 'என்றுவந்தாய்! என்னுந்திருக்குறிப்புடன் அம்பலவனருட்கடைக்கண் சாத்தியருளப்பெற்று அந்நிலையினிற்குங்கால் பெத்தாச்சியடிகள் பொன்னம்பலவன் என்னும் நஞ்சிரியமணியை அச்சிதம்பரவாரியன்முன் கூட்டி நிறுத்தி ஐய! இம்மகவைத் தேவரீர் மாணாக்கனாகத் தெய்வத்திருவுளத்திற்கொண்டுதிகழ்விக்கவேண்டுமெனக் கூறினாராக; அக்கருணாநிதி "சிதம்பரத்திடத்தே பொன்னம்பலமிருத்தல்" முறையாமென, மனமுவந்து தனதடியருடன் சேர்த்து பின் கோயிலூர் சென்றிருக்குங்கால் பொன்னம்பலவனார் மாணாக்கர்க்குரிய ஆத்தம், அங்கம், தானம், சத்பாவம் என்னும் நாற்பணியில் மேற்பட்டாராகிநிற்கும் நிலையையறிந்து

இவர்க்கு 'சசிவன்னபோதம்' என்னும் அருநூலினை முதனூலர் கப்பாடமோதிப்பின்முறையே ஏனைய வேதாந்த அறிவுநூற்களை யுணர்த்திவருங்கால் இவரது தெள்ளிய அறிவின்மாட்சியும், கூரியமதியின் நீட்சியும், சீரிய ஒழுக்கின்காட்சியும்கண்டுகளித்த அக்கருணாநிதி ஞானவாசிட்டமீறாகவுள்ள பரம்பரை வேதாந்த நூற்களைத்துரிதத்துடன் ஓதுவித்ததுமன்றி அத்திருமடத்தின் வதியும் ஏனையவடியவர்கட்குத் தான் முதலிற்கூறிய சாத்திரங் கட்கு மறுமுறை பாடஞ்சொல்லும்படியும் செய்வித்தனர்.

நம்பொன்னம்பலவனாரின் போதனாமுறைகேட்ட புண்ணிய ராகிய அவ்வாசிரியர் பெருந்தகையார் கருணாநிதியென்னும் பெயர்க்குண்மைநிலயராதலினானும், நம்பொன்னம்பலவனாரிடம் பொலிவுறுகுணநலன்கண்டும் "பொன்னம்பலய்யா!" என அருமைவிளியாலழைப்பாராயினர். அடியவர்கட்குப்பாடங்கூறுங் கால் அரியஅபிநயங்களுடனும், அர்த்தபுஷ்டியுடனும், தெள் ளியநடையில் கேட்போர் மனத்திற்பதியும்வண்ணம் இன்னுரை பெய்துரைக்குங்காட்சிகண்டு 'கண்ணேறுபடுமோ' என அடிய வர்களஞ்சுவார்களாம். இங்ஙனமிருக்குங்கால் சம்ஸ்கிருதம், ஹிந்திமுதலிய பாஷாந்தரங்களில் நூற்பயிற்சிபெறற்பொருட்டுக் காசிநகரெய்தக்கருதி, தனதிறைவர்பால் விடைகேட்டற்குமன மிலராயிருந்தும், ஆகூழ்தூண்டுவிக்க மனமொருப்பட்டு அக்கரு ணாநிதிபால் விடைகேட்பாராயினர். 'பேயோடுபழகுறினும் பிரி தரிதானல்' மணியும்ஒளியும்போன்று ஒன்றியிருந்த அவ்விருவர் மனமும் பிரிவுறத்துணியாது அலக்கணுறல் அருமையன்றே!? அங்ஙனமாயினும் ஆரியங்கற்குமவாமீக்கூர அடியர்கள்புடைசூழ விருக்கும்ஞான்றுஆசிரியர்பானண்ணி "அடியேன் காசி சென்று ஆரியமும், ஹிந்தியும் கற்று விரைவிற்றிருவடி வந்துறுவேன், விடையளித்தருளல்வேண்டும்" எனஆசிரியர்பாலிரந்தனர். அவ் விடையளித்தருளல்வேண்டும் ... வாசிரியமணியும் 'சென்றுவிரைந்துவருதி' என விடைகொடுக்க ஒருப்பட்டுக்கூறினவுடன் "அன்பிற்குமுண்டோவடைக்குந்தா ழார்வலார்-புன்கண்ணீர்பூசறரும்" என்னுந்தமிழ்மறைவாக்கின்

படி அவ்வாசிரியர் இருகண்மலரினின்றும் அன்பின்றுளிகடிரு
மார்பிற்சிந்த அகங்குழைந்து அங்கையாற்றிருநீறள்ளி நம்பொன்
னம்பலவனார்க்கீந்தனர். "தாயைப்போற்பிள்ளை" என்னுஞ்சான்
றோர் மொழியின்படி நம்பொன்னம்பலவனார் மனமும் அனற்பட்ட
விழுதெனவுருகி அணையுடைத்தெழுநீத்தம்போல், அன்பின்பெரு
க்கெடுத்துக் கண்ணீராறாய்ப் பெருகத்தழுதழுத்த குரலுடன்
தாளுந்தடங்கையுங்கூப்பி நிற்பாராயினர். புடைநின்ற அடியவர்
குழாங்களிங்கிருவர்செயல்கண்டு கண்ணீருகுத்தனர். பொதுவாய்
அன்று நிகழ்ந்தகாட்சி அயோத்திநகரில் இராகவனைப்பிரிந்தஅர
சவையின் காட்சியெனலாயிற்று. பின்னர் அன்பர்களான காரை
நகர் மெ. செ. சபாபதிஐயாமுதலியவர்களுடன் காசிநகர்சென்று
நாடோறும் பாகீரதிபடிந்து அவிர்சடைவேணியமலனையும்,
விண்டுமாதவனையும், விசாலாக்ஷியையும் தரிசித்துவரும்நாளில்
ஓர்நாள் அன்னபூரணித்தேவியினருகேசெலவொண்ணாது அன்
பர்கூட்டம் நெருங்குற்றிருத்தல்கண்டு மின்னலையேய் நுண்ணிடை
யன்னையாம் அன்னபூரணித்தேவியின்றிருமுக மண்டலத்தை
நோக்கி அம்மே! எனது சேவையை ஏற்றுக்கடைக்கண் சாற்றி
யருளவேண்டுமெனத் துதித்துத்தன்கரத்திருந்த சந்தனச்சிற்று
ருண்டையைத்தூரத்திருந்தே அன்பெனும்விசைவிரவ எறிந்தனர்.
அச்சந்தன உருண்டை அம்மையின் நெற்றியில் திலதமாயமைந்
தது கண்டு பெருங்களிப்பெய்தித் தனதிருப்பிடஞ் சேர்ந்தனர்.
காசிநகர் வந்த நாடொடங்கி ஆங்குறைதவமணியான **ஸ்ரீ** கிரு
ஷ்ணசாமிகளிடமணுகி நச்செனவுலகவிச்சையைநீத்தநிச்சலதாச
ரென்னும் அருங்கலைவிநோதனார் இந்திபாஷையில் இபற்றியுள்ள
விசாரசாகரம் என்னும் நூலைத்தெள்ளறவோதி முடித்தபின்,
தனதிறைவர்க்காணுமவா இதயத்துந்த தனது ஆசிரியர் காசி
யாத்திரைக்காக உதவியபொருள் மிகுதி கையிருத்தலின் அதனை
கோயிலூர்ப்பதியில் அரதனவலிக்குத் தயிரனமளித்த மரகத
மேனித்திருநெலையார்க்கு குதிரைவாகன அலங்காரத்திருவுலாக்
காட்சிக்குரிய குதிரைவீரர் உடைபோன்றசட்டையினைப்பட்டும்
பொற்சரிகையும்விரவித்தைத்தெடுத்துக்கொண்டு, தனக்குவிசார

சாகரமுரைத்தசெருக்கறுமாதவக்கிருஷ்ணசுவாமிகள்பால்விடை வேண்ட, அப்பெரியார் உச்சிமேற்புலவர்கொள் நிச்சலதாசரால் (உஎ) லெட்சங் கிரந்தங்களின் மூழ்கித்திரட்டியாக்கப்பெற்ற 'விருத்திப்பிரபாகரம்' என்னும் இந்நூலினைக்கரத்திற் கொடுத்து உனது தெளிவுறுமுளத்திலெளிதினிற் புலனுமாதலின் இதனை நீயே படித்துணருதியென வாழ்த்தியனுப்பினர்.

தனது நண்பர்களுடன்றிரும்பிச் சென்னைமா நகரணுகி வித்யாரண்யமுனீந்திரர் வடமொழியிலியற்றிய பஞ்சதசியென்னும் தமிழ்மொழிபெயர்ப்பு நூலினை அங்கிருந்து ஆய்ந்தச்சியற்றுவித்து, தான் காயமாபுரம் வியமேவிய கோயிலூர்ப்பதிநண்ணி தாயினைக்காணும்சேயினைப் போன்றும், முகில்நனிவிழையும் மயிலினைப்போன்றும், ஒண்டுளி விழையும் மென்றளிர்போன்றும், பொருணனிவிழையு மிரவலர் போன்றும், விண்ணொளிவிழையும் கண்ணிலார்போன்றும் தனதாசிரியர்பால் பெருவிழைவெய்திவிரைவினண்ணி, கங்கையுந்திருநீறும் துளவமும் பலங்களுங்கையுறையாக்கொண்டுஆசிரியர்திருமுன்வைத்து வணங்கிநின்றனர். இவரது வரவுகண்ட கருணநிதிஎன்னும்பெரியார் இயல்பானே இராஜகெம்பீரத்தோற்றமும் பரந்தமார்பும் மலர்ந்தமுகமும் விரிந்தநுதலும் திருநீற்றொளியும் நீடியகரங்களும் பீடியநடையும் பொற்கெண்டை பெய்தநெய்தவெண்டுகிலும் கண்டார்காமுறும் பொலிவும்உடையராதலினால் அவரது முகமண்டலம் உவாமதிபோன்று விகாசத்தையடைந்து சேயினைக்கண்ட தாயினைப்போன்று உளம்பூரித்துபுன்முறுவல்பூப்பவுவப்பெய்தி ஆசீர்வதித்தனர். இங்ஙனமங்குறையுநாள், மதுரையஃபதியிற் குதிரைமாறிய புங்கவர் பங்குறை அங்கயற்கண்ணியின் ஆலயம் சீர்செயவேண்டி கோயிலூர்ப்பதியினின்றெழுந்ததனது இறைவனுருடன்திருவாவடுதுறைமடத்தில் தேசிகராய் அக்காலத்தமர்ந்திருந்த ஸ்ரீசுப்பிரமண்யதேசிகரிடம் சென்றனராக, அப்போது அச்சுப்பிரமண்யதேசிக அடிகள் கருணநிதியாகிய சிதம்பரஞானதேசிகனை நோக்கி ஐய! தங்கள்



கல்விப்புலமை காணப்பெறுவேமாயினும் தங்கள் மாணாக்கர்வாயிலாய் வேதாந்த நூற்கவிகளில் இரண்டொன்றற்கு விரிவுரை கூறக் கேட்கவிருப்புளது, அங்ஙனம் புகல ஆக்ஞையிட்டருளல் வேண்டுமென்றனர். அதுகேட்ட கருணாநிதி தமதருட்கடல் குளித்த பெருக்குறு மதியுடைப் பொன்னம்பலவரை அழைத்து தேசிகரவாவைத்தீர்த்திடுதிஎன்றனர். இறையுந்தாழ்க்காது பிரமகீதையின் மூன்றாமத்தியாயத்துள்ள செய்யுட்சிலகூறி அதற்கு வடநூற்பயிற்சி பெற்றிருத்தலின் வித்யாரண்யமுனீந்திரரியற்றிய விரிவுரையிற்கண்ட பெருவுரை கூறி அவையைச்சிறப்பித்தனர். அதுகேட்டவாசிரியர் 'ஈன்றபொழுதிற்பெரிதுவக்குந்தன்மகனைச் சான்றோனெனக்கேட்டதாய்' என்னும் பொய்யாமறைக்கேற்ப தனதருள்பெற்ற பொன்னம்பலவர் ஆரியப்புலமை பெற்றிருத்தலறிந்து மிகமிகமகிழ்வெய்தி கோவிலூர் வந்ததும் பிரமகீதைக் கவிக்குமூலத்திற்கியைய அரும்பதவுரையும் விரிவுரைச்சாரமும் இயைபுற எழுதும்படி செய்தனர். இங்ஙனம் உடற்குயிர்போல் கட்கிமைபோல் ஊசிநூலொத்து வதிந்துறைநாளில் கலியாண்டு ௪௯௱௯௰௭ தாது௵ ஆடி௴ ௪௨ ரோகணிநக்ஷத்திரத்திருநாளில் தனதாசிரியரும், கோயிலூர் மடத்தினைப்பல்லாற்றானும் வளம் பெறச்செய்தபண்ணவரும், வைராகமாதி சகலசத்குண கணங்களாலலங்கரிக்கப்பெற்ற துறவற இல்லறமாணாக்கர்களைப்பன்னூற்றுக்கணக்காய்ப்பெற்றவரும், தனதகத்தூய்மைத்தோற்றமனைய வெண்ணிறக்கலையுடன்மிளிர்ந்ததால் 'ஐபாவாள்' என்றழைக்கப் பெற்றவரும் ஆயஸ்ரீசிதம்பரஞானதேசிகர் மாலுறுபற்றொன்றின்றிப்பூவினூற்றம்வானுறல்போற் பரமபதவாழ்வென்னும் இனிப் பிறவாமுடிவானவிதேகமுக்தியெய்தினர். அவ்விறைவரது திவ்ய மங்களத் திருமேனியைச் சகலவைபவத்துடன் ஸ்ரீ முத்துராமலிங்கதேசிகர் என்னும் கோயிலூர்மடத்தின் மூலகர்த்தாவாகிய ஸ்ரீ ஆண்டவர்சந்நிதிமுன்சமாதிசெய்வித்துறையும் நாள் அடியவரைவலிந்தாளும் அம்பலவன் திருவிளையாட்டென்றாது பின்னெனென்னலாம்? பலவாற்றானும்தனதாசிரியர் பீடத்தமர்வுறத் தக்க சீரியரிவரேயாயினும் ஸ்ரீகோயிலூர் மடாலயத்தில் வேதா

ந்த நூற்பயின்று அம்மடத்தின் வளங்கருதுவோர் விஜாதீய விருத்தி வியவதானரகித ஸஜாதீயவிருத்திப்பிரவாகவிழைவு கருதினமைகண்டு இதூஉம் சாத்திரத்திற்கேற்றமுறையெனக்கண்டுவமகிழ்ந்து, தனது உடனுறைமாணுக்கராகி யொழுக்கமாதிகளாற்சிறந்த தனவணிகர்மரபிலுதித்த ஸ்ரீ இராமசாமிஞானதேசிகரை அவ்விறைவர் பீடத்தமர்த்தித்தான் அவ்விடம்நின்றகன்று தமதுபரமேஷ்டியாசிரியபீடத்தலமான சிக்கல் பொருள்வைத்தசேரிமடத்திற்கெழுந்தருளினர். அயோத்திநகரில் கூனி கலைப்பும் கைகேயிகயமையுங்காரணமாகத் திருவுடைஇராகவர் வனம் புக்காராக அதுகேட்ட (தசரதன்உடல்நீத்தபின்) இலக்குமணன் முதலிய உண்மைபாடவமணிகளுங்கூடக் காடுறைந்தாங்கு கோயிலூரில் வதிந்த அடியரிற் பலர் நம்பொன்னம்பலவனுருடன் அணுகிப்போந்தனர். இராகவர்பிரிவெய்திவனம்புக்காரெனினும் திருவுடை இராகவரைக்காடுசெலுத்திய கைகேசியின்கயமையைக் கருதாது அவளது மைந்தனாகிய பரதாழ்வார் ஸ்ரீ தாசரதியின் பாதுகை கரந்தாங்கி அதனை யரியணையேற்றி அதற்கே யரசுரிமைவழங்கி யுயிரினுமினிதாயோம்பி வாழ்ந்துவந்த சரிதம் நமது பாரததேவியின் சத்யசரிதமாதலின், நம்பொன்னம்பலவனும் கோயிலூரில் தனதிறைவர் திருமேனி பிரிவெய்தியதும் அவ்விறைவர் பாதுகையை அங்கிருந்து அங்கைதாங்கி அதனையுயிரினுமினிதாயோம்பி நாடோறும் விதியுடன் பூஜித்து அதன்பின் ஏனையவினைகளாற்ற ஒருப்படுவர். இங்ஙனம் சிக்கல் மடத்திற் சிலகாலமிருத்தல் கேட்டு கோயிலூரிற்றங்கியிருந்த அடியரிற்சிலரும் வந்தமைகண்டு சிக்கல் மடம் கோயிலூர் மடத்திற்குட்கிடையானதால் அவ்விருவர்க்கும் தம்மிருப்பால் வெறுப்புறுதலுண்டாமெனவெண்ணி, திருவாரூர் தெக்ஷிணமூர்த்திமடத்திலிருந்த சாமிநாதசுவாமிகளென்னும் பெரியார் அம்மடத்தினைத் தம்பெயர்க்கு எழுதிவைத்திருந்தவுரிமைபற்றி அடியவர்களுடன் அங்குசென்றுவைகினர். அடியர்கூட்டமிக்கிருத்தற்கு அவ்விடத்திற் போதியபொருள்வசதி முதலியனவின்மைகருதி ஆண்டிருந்து திருமழபாடிசென்று அங்குறையுநாள் கொள்ளிடத்திற்

பெருக்கெடுத்து அரிசி முதலிய உணவுப் பொருள்கள் வாராது தடைபெற அதனாலடியவர்கட்கின்னலுறுவதுகண்டு புனல்வாசல் எனுந்தலத்திற்கு வந்து அங்கோர் ஆச்சிரமங்கண்டு தனதாசிரியர் திருவடியை யதிற்ருபித்து அடியவர்களுடனுறையுங்கால் தனவணிகர்களான கண்டனூர், திருவாளர் சி. நா. நா. முத்தையச்செட்டியாரென்னுமன்பரும், ராயபுரம் சு. கு. சுப்பிரமணிய ஐயாளென்னும் அன்பரும் உணவாதிகட்குவேண்டிய பண்டங்களை யுதவிவந்தனர். பின் பெரியதோர் மடமொன்றியற்றவெண்ணிச் செங்கற்சூளை போட்டு முடிந்தவுடன்; "அப்பர்க்குச் சூலைநோய் விடுத்தாண்ட கன்னிப்பிறையணி சென்னியரான அண்ணலார் நம் பொன்னம்பலவர்க்குச் சுரநோயை விடுத்துத் துன்புறுத்தினர். தக்கமருத்துவர்களாற் றகுமருந்துகள் பல பன்னாளுதவியும் நோய்தீராது சிதம்பரத்திற்குச் சென்று ஆடகப்பொதுவினுடகமியற்றும் ஏடவிழ்கூந்தலிறைவிபாகனைக் காணவெண்ணியிருக்கும் ஞான்று தில்லையினின்று மானிட வேடங்கொண்ட தீக்ஷிதரொருவர் ஸ்ரீ நடராஜமூர்த்தியின் செஞ்சிலம்பரற்றும் குஞ்சிதபாதத்திற்சாத்திய ஸ்ரீ குஞ்சிதபாதச்சுவடும், திருநீறுங் கொண்டுவந்தளிக்க பளிங்கமனைய தெள்ளியமனத்து நம் பொன்னம்பலவிறைவர் வந்தவர் ஸ்ரீ பொன்னம்பலவரெனவெண்ணி ஸ்ரீ குஞ்சிதபாதச்சுவட்டினை அன்புடன்பெற்றுச் சிரத்தொற்றி வெண்ணீறுவாங்கி நுதலிற்றரித்திருத்தலும் "எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட்டெமையாளுஞ் சம்பந்தன் காழியர்கோன்" றன் கைநீறுபடக் கூன்பாண்டியனது சுரநோய்தீர்ந்தாங்குச் சுரநோய் தணிந்தது. உடனே சிவிகையேறி பசுபதிகோயில்மடம் வந்ததும் சுரநோய் முழுதும் நீங்கிற்று. பின் சிதம்பரம்வந்து ஸ்ரீ மௌனஞானதேசிகர் மடத்தில் தனதிறைவர் திருவடியைத்தாபித்து அதனையர்ச்சித்து வணங்கித் தனையண்மிய அடியவர்கட்கு ஐபந்திரிபகல வேதாந்தசாத்திர அர்த்தங்களை யுணர்த்தி நான்காண்டுறைந்து "கரையான் புற்றியற்ற அரவுகுடியிருந்தாங்கு" தனக்கென ஒருரியவிடமின்றிக் காலங்கழிக்கவிருந்தனர். இவரிங்ஙனமிருக்குநாள் திருவருளால் காரைக்குடி யென்னும் வளநகருறையும் தனவணிகமணியான உயர்திருவாளர் முரு. ராம. ஆவிச்சிச்செட்டியா ரென்பார் தனது பரூஉடல்நீத்த ஞான்று

தனது அரியமகனிடம் " மைந்த! எனது புகழுடனீஞ்ஞன் இவ்வுலகினிலவ வேண்டி சிதம்பரத்துறையும் ஸ்ரீ பொன்னம்பல சுவர்மிகட்கு (௧௰௫) ரூபாய் நன்கொடையாக என்பொருட்டுதவுவாயாக" எனவாக்களித்து உயிர்நீத்தனர். அவ்வுத்தமரின் நல்லெண்ணங்காரணமாகவும், புடைசூழவிருந்த அடியவர்களின் தூண்டல்காரணமாகவும் அப்பொருள்கொண்டு தனித்து மடமொன்றியற்றவெண்ணினர். அவ்வள்ளல் திலகமான ஆவிச்சிச் செட்டியாரின் மைந்தனரிடம் அப்பணத்தினை இவர்க்குதவாது செய்யப் பிறர் பலத்தவெத்தனங்கள் செய்தும் " தந்தைசொன்மிக்க மந்திரமில்லை" யென்னும் மூதுரைகடைப்பிடித்து அப்பொருளை நம் பொன்னம்பலவர்க்கே யீந்தனராக; அதுகொண்டு சிதம்பரத்தில் அரியமடமொன்றியற்றி அதில் தனதாசிரியர் திருவடிச்சுவடுபடிந்தகுமிழ்ப்பாதுகைக்குப்பொற்றகடுவேய்ந்து அழகிய விமானமமைத்து அதிற்ருபித்து 'அப்பூதியடிகள்போன்று' அம்மடத்திற்குத் தனதிறைவர் பெயரால் கோவிலூர்ச் சிதம்பர ஸ்வாமிகள் மடம் என்பதன் குழூக்குறியாக கோ.-சித. மடம் எனநாமமிட்டு கலியாண்டுசகூஅங சுபாநுஸு சித்திரைமீ செவ்வாய் குருவாரத்தில் மடாலயப்பிரவேசஞ் செயவெண்ணி, தனதாசிரியத்தானமான கோயிலூரில் மடாதிபதியாயிருந்த ஸ்ரீ இராமசாமிஞானதேசிகரை வரவழைத்து மடாலயப்பிரவேச நாளிரவு அப்பெரியாரைக்கொண்டு தனதுதானத்துப் பிற்கால மடாதிபதியாய் வீற்றிருக்கப்பெற்ற ஸ்ரீ காசிவாசி சிதம்பரஸ்வாமிகட்கு பஞ்சதசி எனும் நூலினைப் பாடஞ்சொல்வித்தனர். "அவ்விடத்தாற்றான் இவ்வளவும் ஏற்பட்டது" என்று முகமன் மொழிகூறி யுவகையுடனுபசரித்தனர். இப்பெரியாரின் குணநலனிருந்தவாறென்னே! இவர்பால் வளர்ந்து தழைத்தோங்கிய குருபக்தியின் செறிவென்னே! இங்ஙனம் மடத்தினையியற்றியமர்ந்துறை நாள் புளியம்பழமும் ஓடும்போல, மடத்தின் விவகாரத்திற் பற்றற்றவுளத்தினராய், நூலாராய்ச்சி, பாடமோதல், நூற்கட்கு உரையியற்றல்முதலிய சாஸ்திரநெறியன்றிப் பிறநெறி புறநெறியாக்கியிருப்பர். சாந்தமும், தண்ணளியும், தூய்மனமுங்கொண்ட இப்பெரியார்பால் மடத்திலுள்ள பணியாளர்பால் குற்றம்நிகழின்

அதற்குத்தக்க பரிகாரம் செய்யவேண்டும் எனப்பிறர் குறை கூறின், "வந்தகோபம் போவதற்குள் அழைமின்" என அறைவர். சிறிதுநேரந் தாழ்த்திவரின் குறையினையே கேட்காதிருப்பர். மடத்தினுறையும், அடியவர், பணியாளர், சிறார்கள், ஆவினங்களும் இவர்பால்நண்ணின் சீற்றமகன்று தண்ணளிதோய்ந்து நிற்குங்காட்சி காண்டற்கரியதாம். இவரதுகரத்தில் ஏடேந்தின் பிறர்பக்கத்தியற்றுந் தொழிலுந் தோற்றாது ஒரே நோக்குடனிருப்பர். இங்ஙனமாங்கால் ஸ்ரீ கண்ணனருள் கீதையினைக் கவின்பெறு கன்னித்தண்டமிழில் பட்டரால் பாவாக ஆக்கப்பெற்றுள்ள பரமார்த்ததரிசனமென்னும் பகவத்கீதைக்கு உயரியவுரை காணவெண்ணி, தேவவாணியில் ஸ்ரீமதுசூதனசரஸ்வதியவர்களாலியற்றியுள்ள கூடார்த்ததீபிகையினையும், இந்திபாஷையில் ஸ்ரீ சித்கனானந்தகிரிஸ்வாமிகளால், மதுசூதனி, ஸ்ரீதரி, சங்கரானந்தி முதலிய வியாக்கியானங்களையுமநுசரித்து இயற்றியுள்ள கூடார்த்ததீபமென்னு முரையின் பொருளினையுங் கருத்துட்கொண்டு அரியதோர் விரிவுரையியற்றி அச்சியற்றித் தமிழுலகிற்கீந்தனர். அன்றியும்; படர்ந்த வேதாந்தமென்னும் பாற்கடலில், தமது உயரிய புந்தியானியற்றிய சூத்திரம், வார்த்திக பாஷியாதி யொண்குடங்களில் வாதராயணர் முதலிய பெரியார் முகந்துவைக்க அவற்றைச் சத்குருசந்நிதித் தீயிற்காய்ச்சி தமதநுபூதிமத்தாற்கடைந்து தமது நாவெனுங் கரத்தால் திரட்டியெடுத்துத்தமிழ்மக்களின் பிறவிப்பெரும்பிணிக்குஅருமருந்தாக அமிழ்தினுமினிய தமிழ் மொழியதனில் கண்டகு சீர்த்தித் "தாண்டவராயரால்" கைவல்யநவநீதமெனும் பெயருடன் இனிய கவிவடிவிலியற்றியுள்ள அருநூற்குப் பிறராற் சுருதி யுக்தி அநுபவ விரோதமாக, ஈசுரனே யாவரணமறைக்குமென்பனவாதியவுரையியற்றியிருந்தமை கண்டு மனம்பொறாது அந்நூற்கு ஸ்ரீ வியாசசூத்திரத்திற்கு ஸ்ரீ சங்கரபகவத்பாதபாடியமேபோன்று அரியதோர் விரிவுரைகண்டதனையச்சியற்றித் தமிழுலகின் வேதாந்தநூல்விழைந்தார் மனவிருட்குச் செஞ்ஞாயிற்றொளியாயும், புலவர்களின் ஆராய்ச்சி யறிவிற்கோர் நல்விருந்தாயுமுலவவீந்தனர். இவ்வுயரியவுரையினை யுடனிருந்து இயற்றுதற்கும்,

எழுதுதற்கும், ஒப்புப்பார்த்தச்சியற்றி வெளியிடற்கும் அவதரித்தவர்களென உதவிபுரிந்தவர்கள் ஸ்ரீ இராமாநுஜய்யர் என்னும் ஸ்ரீ குஞ்சிதபாதஸ்வாமிகளும், ஸ்ரீ சுப்பராயசுவாமிகளுமாகிய நன்மாணுக்கராவர். இஃதேயன்றி, பச்சைமேனி இராகவர்க்குப் பவளமேனி வசிட்டமுனிவரால் உபதேசித்தருளிய லகுயோக வாசிட்டமெனும் அருந்தமிழ்நூலினை மூலத்திற்கியையத் திருத்தியச்சியற்றுவித்தும், ஸ்ரீ திருவேங்கிடநாதராலியற்றியுள்ள பிரபோத சந்திரோதயமென்னும் தமிழ்நூலினை யாய்ந்தச்சியற்றுவித்தும், ஸ்ரீ துறைமங்கலம் கவிராஜராஜரான ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளா லியற்றியுள்ள "வேதாந்த சூடாமணி" யெனும் வேதாந்த நூற்கு "மறைபொருள் விளக்கம்" எனும் உரை இயற்றிவைத்தும், மடத்தினண்ணிய முத்தி விருப்புடையடியவர்கட்கு உண்டிமுதலியனவுதவி ஆன்மோபதேசஞ்செய்துமிருந்தனர். அன்றியும், மன்றுள்வாழ் மாமணியாம் அற்புதக்கூத்தர்க்குப் பொற்கோயில் காணவெண்ணி கானுடுகாத்தான் என்னும் வளம்பெறு நகருறை வைசியகுல வள்ளல்களும், தம்பால் வேதாந்தநூல் கற்றுணர்ந்தவர்களுமான திருவாளர்கள் அருணசலய்யா, சிதம்பரய்யா-முத்தையாச் செட்டியார் முதலிய அன்பர்களுடன் தேவிகோட்டை முதலிய வணிகமணிகள் வாழ்வளநகர்தோறுஞ்சென்று அவர்கள்பாற் சேகரித்த பெரும்பொருள்கொண்டு ஸ்ரீசிதம்பரம் சிற்சபைக்குப் பொற்றகடுவேய்ந்து கும்பாபிஷேகஞ் செய்வித்தும், தமதன்பர்களான நகரதனவைசியர்களைக்கொண்டு சிதம்பரத்தலத்தில் வேதபாடசாலைகள், நந்தவனங்கள், வித்யாசாலைகள், பசுமடங்கள் முதலிய அறநிலயங்களும் செய்வித்தனர். அன்றி, புலிக்கான்முனிவன் இட்டதெய்வத்தலமாகிய திருப்புலீச்சுரத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ யௌவனேச்சுராலயம் பூமிக்கண் தாழ்ந்து மிகப்பழுதுற்றிருந்ததைத் திருந்தப்பணிசெயவெண்ணி காரைக்குடியில் இளையாத்தக்குடிக்கோயில், ஒக்கூருடையார் மரபில், பொய்சொல்லார் மனைக்கட்பிறந்து விழுமிய செந்நெறியொழுகுந் திறத்தினரான பெரி. க. சின்னையச்செட்டியாரை யழைத்து "சின்னையா! இவ்வரிய பணிக்கு யுறுதுணையாய்நின்று பணிமுற்றுற முயற்சியேற்

றுக்கொள்ளுதி" யென அவர் ஒப்பிய மனத்தரேனும், மாதுர் பக்திமிக்க மாண்பினராதலின், தமதன்னையின் முதுமைகருதி அவரைப்பிரிந்து பர்மாமுதலிய கடற்புறநாடுகட்குப் பொருள் வருவாய் விழைந்து செல்லுதற்கு மனமொருப்படாது நிற்க அவரதன்னையார், தமதருளிறை திருமேனியுடன்றேன்றிறைாத லின், அம்மரியாதைபற்றி அவரதில்லஞ்சென்று சின்னையாவின் அன்னையாரை யழைத்து ஆச்சி! சின்னையாவை அரன்றிருப் பணிக்காயனுப்பத் தங்களாற்றடையென்னென வினவ, சுவாமீ! நான் முதுமையாற்றளர்நடையுற்றிருத்தலின், எனது இறுதிக் கடன்முடித்துச் சின்னையன் எங்கு செல்லினுஞ் செல்க; நான் உயிர் நீக்குங்கால் சின்னையா என்னிடமிருத்தல் வேண்டும், இஃதொன்றே எனதுவிழைவு எனக்கூற ஸ்ரீசுவாமிகள் அவ்வம் யாரை நோக்கி பிச்சம்மே! சின்னையா எங்குச்செல்லினும் அவ னது கரத்தாலேயே தங்களது இறுதிக்கடன் முடியும் "இது இறைவனருளாற் சரதமாய் நிகழும்" ஆதலின், தடை சொல் லாதுமனமுவந்து, அநுப்புவியுங்கள் எனஉறுதிகூற அவ்வம்மை யாரும் மனமுவந்து அநுப்ப ஒருப்பட்டனர். சின்னையச்செட்டி யாருடன் தனது சீடர்களையும் பர்மாவிற்கநுப்பிப் பொருள்சேக ரித்து முடிந்து காசியாத்திரை சென்றுவரவெண்ணி வங்காள நகர்வந்ததும், சின்னையாவின் அன்னையார்க்குக் காரைக்குடியில் மெய்வருத்தமுற்ற செய்தியறிவிக்க சின்னையர் காரைநகரணுகி தனதருமைத் தாயினைக் கண்டனராக, அவ்வன்னையாரும் தம தருமகவின் முகத்தினைக் கண்ணுு மனமுங் குளிரக்கண்டு சின் னையா! வந்தனையா! எனக்கூறியவுடன் உயிர்பரகதி நண்ணியது கண்டு உலகுவப்பெய்தியது. "கடவுளை நம்பினோர் கைவிடப் படார்" என்னும் பொன்மொழி பொய்யாமோ? இதுகண்ட சின்னையாவிற்குப் பணிபுரியுமவா முன்னையினும் முறுகியெழ, திருப்புலீச்சுரமேய மறைக்கொழுந்தாகிய ஸ்ரீ யெளவனேச்சுர ராலயப்பணியை முற்றுவித்தும், சந்நிதிமுன் "மாதுசொன்ன சூளாலிளமைதுறந்த திருநீலகண்டநாயனுரும், அவரது இல்லக் கிழத்தியும் மூழ்கி இளமைபெற்ற திருக்குளமான யெளவனதீர்த் தத்தினைச் சேறகற்றித் திருத்தி நாற்புறமும் கருங்கல்லணைகட்

டியும் சிருறச்செய்தனர். மேலும், தமிழினுக்கோர் அணிகல னுய்ப் பலகலைதேர்ந்தவற்றினரிய நுண்பொருள்களைத் தமதரு வாக்காற்றெடுத்துக் கற்றுர்மனங் கசிந்துருகக் கவின்பெறு பல சந்தங்கணிறைந்தமதுரக்கவிகளால் அடங்கன்முறை, பாடுதுறை முதலிய அருநூல்களியற்றிய அருங்கலைவிநோதரான ஸ்ரீ தத்வ ராயசுவாமிகள் என்னும் பெரியாரியற்றிய தெள்ளிய நூலிற் றிளைத்தெழுந்து அவற்றின்பொருண்மாட்சிகண்டபுண்ணியராத லின், அவரதுசமாதித்தானங்கண்டு அவர்க்கு ஆலயத்திருப்பணி புரிய வெண்ணியுறையுநாள் ஸ்ரீ விருத்தகிரிக்கும் சிதம்பரத்திற் கும் மத்தியில் இறும்பூதூர் என்னும் எறும்பூரில் அப்பெரியார் சமாதி பழுதுற்று இலைக்கள்ளிப் புதருற்றிருக்கும்நாள் அவ்வால யத்திற் பூஜையியற்றிவந்த சதானந்தசுவாமி என்னும் அடியவ ருள்ளத்தில் "பொன்னம்பலவர் கோயிற்கட்டுவிப்பார்" எனக் கனவுதோன்ற, அவ்வடியார் சிதம்பரம்வந்து இப்பெரியார் திரு முன்வணங்கி நிகழ்ந்தசெய்தி தெரிவிக்க மனமுவகைபூப்பவெழு ந்து எறும்பூர்சென்று இலைக்கள்ளிப்புதர்வாயுள்ள நடைபாதை யிற்பிரதக்கணம்வரும்போது முழுவெள்ளிரூபாய்ஒன்றுகிடக்கக் கண்டுதிருப்பணிக்குத் திருவருளுதவுமாபோன்றதெனவெண்ணி அடியவர்பாலெடுத்துக் கொடுத்துத் தத்வேசுரர் தரிசனஞ் செய்து பின்சிதம்பரம் வந்து திருப்பணியாற்றச்சிந்தையிலுன்னி யுறையும்நாள், உய்யக்கொண்டான் சிறுவயல்என்னும் நகரத்திற் றேன்றிய திருவாளர் சுப்பிரமணியச்செட்டியார் என்பார் தன க்குக் கண்ணோய் கண்டிருத்தலின் சென்னை சென்று கண்மருத் துவச்சாலையில் ரணசிகித்ஸை செய்துகொள்ள வெண்ணி சிதம் பரம் வந்து ஸ்ரீ பொன்னம்பல விறைபாற் செய்தி தெரிவிக்க சுப்பிரமணியா! எனஅருமை மொழியால் விளித்து நீ சென்னை செல்லவேண்டாம்: காலையில் பூஜாகாலத்திற்றங்கி திருநீறுபெற் றணிந்துக்கொள், கண்ணோய்நீங்கும்; எனத்திருவாய்மலர்ந்தரு ளினர். அங்ஙனமே அவர் காத்திருந்து வெண்ணீறு பெற்றுத் தரித்தனர். அகக்கண்ணோயாய அஞ்ஞானபடலமறுக்கும் அரு ட்டிருநீறு, புறக்கண்படலநோயகற்றல் புதுமைத்தோ! ஞாயிற் றெளியான்மையிருள்போ லகன்றது.

"வாடுஞ் சிலவினை நாமிருந் தாலிடர் வந்திடுமென்
றோடுஞ் சிலவினை யெங்ஙனஞ் செல்வமென் றோடவழி
தேடுஞ் சிலவினை மீட்டும் வரேனென்று செப்பியங்கை
போடுஞ்சிலவினை பொன்னம் பலத்தின்வெண் பூதிகண்டே

என்னும் கவி இவ்வதிசயங் கண்டவறிஞராற்பாடப் பெற்ற தென்பர்.

இயல்பானே வள்ளற்றன்மை மிக்க அச்சுப்பிரமணியஞ் செட்டியாரென்பார் பர்மாநகர் சென்று "பணங்காய்க்கும்மரம் கிடைத்ததோ" என்று பொன்னம்பல இறைவர் எழுதும்படி வேண்டிய பொருள்களைப் பர்மாவினின்றுமநுப்புவித்தனர். அப் பெருநிதிகொண்டு ஸ்ரீதத்துவனுர்க்கு அழகிய கருங்கற்றிருப் பணியும், பூஜைசெய்தற்குரிய அந்தணரில்லமும், அடியவர் வசிக்கத் திருமடமும், ஆவுறைசாலையும், நந்தனவனமும், மூன்று குளங்களும், வளம்பெறச்செய்து, விளைநிலங்களும் வாங்குவித்து அத்தத்துவராயப் பெருந்தகையாரின் உத்ஸவவிக்கிரகஞ்செய்து ஆடிமாத அமரபக்கத்துச் சதயநக்ஷத்திரத்தில் குருபூஜையும் திருவோலக்கமும் நடாத்திக் கண்டார் இருமை நலனும்பெற எறும்பூரை இறும்பூதூர் என ஆக்கினர்.

இங்ஙனமமர்ந்துறை நாளில், தமது குருத்தானமாகிய கோயிலூரில் ஆசிரியபீடத்தமர்ந்திருந்த ஸ்ரீ இராமசாமிஞான தேசிகர் ஜீவன்முக்ததசைநீத்து விதேகமுத்தியெய்தியமையின், ஆண்டுச் சென்று அவ்விறைவர் பீடத்திற்கியைந்த செழுமணியாகத்தன்பால் அருங்கலைகற்று-கற்றுங்கொழுகி-பாபமலிகலியிற் சுகனெனமிளிர்ந்த ஸ்ரீவீரசேகர ஞானதேசிகரை அவ்வாசிரியர் பீடத்தேற்றி அக்கோயிலூரிலேயேசிலகாலமிருந்துதானே அடியவர்கட்கு வேதாந்த பாடங்கள் கூறியும், அவ்வீரசேகரவிறைவர்க்கு இந்திபாஷையில் விசாரசாகர நூலுணர்த்தியுமிருந்து வைராகமூர்த்தியாய அப்பெரியார்மீது பொறுப்பேற்றுவித்துத் தான் சிதம்பரம்வந்து நண்ணினர். இவ்விருபெரியாரும் ஒழுகிய முறைகண்டார்க்கேயன்றிக் கேட்டார்க்கும் உவட்டாவுவப்பெழு

ப்புஞ்செவ்வித்தாம். இவ்விருவர்காலத்திற்கண்ட மரபொழுக்கே. கோயிலூர்பரம்பரையைச்சார்ந்தசம்சாரார்ணவந்தாண்டும்வேட்கையுடையமுமுக்ஷுக்கட்கு கலங்கரைவிளக்கென்னலாயிருந்தது. அவ்வீரசேகரவிறைவர் சிதம்பரம் மடத்திற்கெழுந்தருளுவரேல், இராகவன் வருகைகண்ட பரதர்போன்ற வுவட்டாவுவகைபூத்தவுளத்தினராய் மடத்தின்முன் காவணமாற்றி, தோரணம்நாற்றி. கதலிதூக்கி, மடத்தில்ரத்தனகம்பளமுதலியன விரித்து அம்புலிவிழையுமம்புதிபோன்று வரவுபார்த்திருத்தல் வழக்கு. இங்ஙனமிருத்தல்கண்ட வீரசேகரமுனிவர் ஒருகால் புண்யமூர்த்தியாம் பொன்னம்பல விறைவரைப் பார்த்து "அடியேன் வருதலுன்னி இங்ஙனமியற்றலடாது" என மொழிந்தனராக. ஹா! ஆண்டவன் சந்நிதியில் யான்பெற்றபேற்றிற்கிதுவோதகும்? இத்தேகத்தின்றேவினைப்பாதுகையாயிதலன்றோ தகும் எனமொழிந்தனர். இதுவன்றோ இறையன்பு! இப்பெரியார் கோயிலூர் மடத்திற்கேகின் இதனினும் பெரிதே அவணுறும் விபவம். அன்றியும், ஸ்ரீகோயிலூர்மடாதிபதியாகிய ஸ்ரீவீரசேகரஞானதேசிகர் தன்பாற் பயின்ற பெற்றியரென்றுன்னாது அவர் தமது குருத்தானத்தமர்ந்திருத்தன் முறைபற்றி அவர்க்கு நிருபம்வரையின் "ஊழியன் பொன்னம்பலவன்" எனக்கைச்சாத்திடுவர்; அடக்கமுடைமையமரருளுய்க்கும் என்னுந் தமிழ்மறையுணர்ந்தொழுகியபெரியாராதலின். இப்பெரியார்காலத்தில் கோயிலூர்ப்பரம்பரையிலுள்ள துறவினர்களுள் இவர்வணங்கும் பெற்றியரிலாக்காரணத்தால் 'பெரியசாமி' என்னும்பெயராலேயே தமிழ்நாட்டு அறிவுடை மக்களாலழைக்கப்பெறுமுரிமை பெற்றிருந்தனர்.

இங்ஙனமருநாள் கோயிலூர் மடத்திற்குரிமையாயுள்ள 'களத்தூர்'' என்னுங் கிராமத்தில் ஈராண்டு மழையிலதாகப்பயிர்வளங்குன்றி நீர்நிலைவறண்டு குடிமக்களலக்கணுறலையும் ஸ்ரீகோவிலூர் மடத்திற்குரிய விளைநிலங்கள் நெல்வருவாயின்றியிருந்தமையுங்கண்டு, அந்தணர்களால் வருணஜப முதலியன செய்தும் மழைகாணாதிருந்தமை கருதிப் பூர்வம் மிதிலாபுரி

யாண்ட ஜனகராஜன் காலத்துப் பன்னீராண்டு விசும்பிற்றுளி வீழ்தலற்றுப் பூக்கண் ஹூற்றுநிலயங்களெல்லாம் வறண்டு ஜீவர்கள் துன்புற்றவந்நாட் கலேக்கோட்டு முனிவரை அடவியினின்றழைத்து அவர்மிதிலேயைமிதித்தலும் விசும்பின்விருஷ்டிகண்ட சரிதை பாரததேசத்தின் பழஞ்சரிதையாதலின், இக்காலத்துக் கலேமுனியாகிய நமது பொனனம்பலப் பெருந்தவனுரை, ஸ்ரீகோயிலூர் மடத்திறைவனுராகிய ஸ்ரீவீரசேகரஞானதேசிகவடிகள் கோயிலூர்மடாலயத்திற்கழைத்து அங்கிருந்து அந்தணர்களும், அடியவர்களும், தனவணிகப்பெருமக்களும் புடைசூழ, மங்கள வாத்தியங்கள்முழங்க, நங்கையர் குரவையொலிவழங்க, குடைசாமர ஆலவட்ட மகரதோரணுதிகள் இருமருங்குமலங்கரிக்க, "களத்தூர்" என்னும் கிராமத்திற்கு விஜயஞ்செய்விக்க, அக்கிராமத்திலுள்ளமடத்திற்றங்கி ஏழைகட்கும் இரவலர்க்கும் போனகமினிதளித்து ஒருபகற்றங்கிவதிய அன்றிரவே மந்தமாருதம் வீசப் பரந்தவானிற்கருமேகங்கணனிசூழ்ந்து மழைபொழிய வாபிகூபதடாகாதிகளெல்லாம் ஜலம்பூரிக்க, அவ்வண்ணலார் தவமெ ண்ணி மண்ணவர் உளம்பூரித்தனர். என்னே! இப்பெரியாரின் றவமிருந்தவாறு. இப்பெரியார் இருவகையுயிர்க்குமினியராயின்ப துன்பமியாதெனென்னதென்றுணராது, ஒருபொருளாலுங்குறைவுபாடின்றி வேடத்தானும், உள்ளத்தானும் சந்நியாசியேயாயினும், அரசர்களும் ஏமாக்கத்தக்க கண்ணிமையொத்த அடியவர்களின் பரிசர்யையாதிகளுடன் பொலிந்துமிளிர்ந்தனர். நடுநிசியில் மடத்தில் அடியவர்முதல் அனைவரும் துயில்கொளமையத்து வீதியில் இரப்போர்சத்தங்கேட்கின் தனதிடம் பெரும்பற்றுளங்கொண்டுறையும் அழகப்பசாமி என்னும் அன்பரையழைத்து அழகப்பா! திருவீதியில் கூவியிரப்போர் ஏழையரல்ல; ஏழைபங்காளரான, ஸ்ரீசித்ஸபேசர் நம்மைப்பரிசோதிக்கவந்துளாராதலின், அவரைவரவழைத்துபசரித்தநுப்புவாயாக. என,

அவாதுமனமும் நோகர்வுரைகூறி பிக்ஷையளித்தது கேட்டபின்னரேதுயில்வர். பின்னொருகால் எறும்பூர் ஸ்ரீதத்வேசுரர் தரிசனப்பொருட்டுச்சென்று அங்குறைநாளிரவு அங்கமுழுது

மழிநோயுற்றுப்பங்கமடைந்த சுணங்கனென்றுவரக்கண்டு அன்றும் அழகப்பா! ஸ்ரீதத்வேசுரரே இங்ஙனம் வந்துளார், இவரையுபசரித்தநுப்புவது நமது கடனாதலின் அனங்கொணர்ந்துவைத்துபசரிப்பாய், எனக்கூறி அந்நோய்ச்சுணங்கனுக்கமுதூட்டிய பின்னர்த் துயின்றனர். அந்தணர்களிடத்தும், சிறுபாலர்களிடத்தும் மிக்கபேரன்பு வாய்ந்தபெற்றியர். இப்பெரியார் ஸ்ரீ கோயிலூர்ப்பரம்பரைக்கே குருமூர்த்தமாயெழுந்தருளியிருந்த ஸ்ரீமுத்திராமலிங்க மூர்த்திகட்கருளாசிரியராகிய பொருள்வைத்தசேரி ஸ்ரீ உகந்தலிங்கஞானதேசிகராதீனம் அவ்வுகந்தலிங்கதேசிகர் மரபாரால் கைப்பற்றப்பெற்ற செய்தியறிந்தவுடன் சிதம்பரத்திருந்து அடியவர்களுடனும், ஏவலாளர்களுடனுஞ்சென்று அம்மடத்தினைக் கைப்பற்றி ஸ்ரீ ஆண்டவர்சந்நிதி அழிவுறாதுமிளிர்ந்தோங்கவெண்ணி ஸ்ரீகோயிலூரில் அமர்ந்திருந்த ஸ்ரீவீரசேகர ஞானதேசிகவடிகளை வரவழைத்து இறைவர்தானத்தை நாம் கைவிடலறமன்றெனப் பல்லாற்றானுங்கூறி மனமொருப்படச் செய்துநியாயமன்றத்தில் வழக்கியற்றி அம்மடத்தினைக்கோயிலூர் மடத்திற்குரிமையாக்கினர்; அஞ்ஞான்றத்தகையவுயரிய முயற்சி செய்யாது தாழ்த்திருப்பின் இற்றைநாளில் கோயிலூரின் குருத்தானம் எந்நிலையுற்றிருக்கும்?

இத்தகையவாலறிவராய் வியவகாரகுசலராயிருந்தும் நடைமுறையிற்காண்புழி வியவகாரமறியாப்பால உன்மத்தர் போன்றுலகினர் காணவிருப்பர். இத்தபோநிதி தனது சரீரந்தளர்வுற்றிருக்கும் அமையம் தனதுதானத்திற்குப்பிற்காலமடாதிபதிகளை நியமிக்கும் உரிமையை ஸ்ரீகோயிலூர் மடாதிபதிகட்கேயிருக்கும்படியான பிற்காலவுரிமைச்சீட்டொன்றனை யெழுதிப்பதிவுசெய்துவைத்தனர். இங்ஙனம் எழுபத்துமூன்றாண்டுவரை மனத்தளர்ச்சியின்றித் தமது மாணாக்கர்கட்கு வசிட்டமீர போன்று அதிகெம்பீரமான தோற்றத்துடனும் உத்ஸாகத்துடனுமிருந்து ஸ்ரீஞானவாசிட்டபாடஞ்சொல்லிவருநாள் சரீரத்தின்கண்ணயர்வு தோன்றி மனமயர்ந்து நிற்குநிலையில் ஸ்ரீகோயிலூர் மடாலயத்தலைமையாசிரியராம் ஸ்ரீவீரசேகரவடிகள் வந்துதரிசித்து "உள்ள

மெங்கிலேயிலுள்ளது'' எனவினவ "இயாது மென்று மெவ்வி டத்து மிறத்தல் பிறத்தலிலதாகும், ஓதும் விவர்த்தரூபத்தாலுல காய்ப் பிரமமேவளரும், ஆதலாலிவ்வுலகெல்லா மடியு முடியு நடு மறப், பேத மறப்பா வாபாவம் பிறவாப் பொருளென்றிடர்தீர் வாய்'' என்னுங்கவியினைக்கூறித்தேற்றினர்.

பின்னர்ச்சில நாளிருந்து பிரார்த்த வொழிவெண்ணி கலியாண்டு ருOOசு குரோதிஷு ஐப்பசித்திங்கள் உஉவ சித்திரை நக்ஷத்திரத்திருநாளில் உலகில் அரசர்முதல் அடிமைவரையில் ஒய்வுபெற்று மங்களஸ்நானமாடி புதியவாடைகள் புனைந்து களித் துறையும் நாளாகிய தீபாவளித்திருநாளன்று தமது தேகவுபாதி நீங்கிச் சுத்தாத்வைத நித்யநிரதிசய ஏகரசானந்த நின்மலஸ்வயம் பிரகாசசைதன்யமாயினர்.

இம்மஹானது திருமேனியை மடத்தின் தென்புறத்திற் சமாதி செய்வித்துத்தனது நன்மாணுக்கரும் தன்னாற் காசிவாசி யென்று தீக்ஷாநாமமிடப் பெற்று ஒழுக்கமாதிகளாலுயர்வுபெற்ற வரும்,தனதுதானத்திற் பிற்காலமடாதிபதித்தானத்தமர்ந்திருந்த வருமான ஸ்ரீகாசிவாசிஸ்வாமிகளால் அரியதோர் கருங்கற்றிருப் பணிபாலயம் அச்சமாதிமீது அமைக்கப்பெற்று சிதம்பரத்திற் கணி கலனாய்விளங்கி வருகிறது.

"அபயஞ்சர்வபூதேப்ய:'' என்றவாக்கியத்திற்கியைய சர்வஜீ வர்களிடத்துங்கருணைபூத்தவுளத்தினராய், அருளாதி நான்குமே யோருருவதாயெழுந்தருளித் தனையண்மிய வடியவர்கட்கு அஞ் ஞானமகற்றி மெஞ்ஞானமளித்த பெரும்புண்ய மூர்த்தியாகிய பெரியாரின் திவ்யசரிதத்தைக்கேட்டாரும், அன்புடன் படித்தா ரும், இருமை நலனுமினிதெய்தி மறைநனிதுதிக்கும் இறையடி நிழலிலின்புற்றிறுமாந்திருப்பரென்பது சரதம்.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

ஆக்கியோன் குறிப்பு:—

''தண்ணளியிற் ஜடபாத ரிறையன்பி ஞாதர்நற் றகுவிராகத் தெண்ணரிய புகழ்கொழிநற் சுகமுனிவர் போதனைக்கோ ரெழின் மென்றேகைப், பண்ணருநல் வண்டிசைகூர் கள்ளிருக்கும் நறுங் கூந்தற் பதுமமேய்ந்த, கண்ணிருக்குஞ் ஜானகியின் காதலர்க்கு ஞானமருட் கடவுளன்னார்'' ஆகிய இப்புண்ய மூர்த்தியின் அருஞ் சரிதையை எழுத நாயிற்கடையாமடியேன் முற்றுந்தகுதியுடையே னல்லேன்; ஆயினும் தமியேனது பாவந்தோயுள்ளத்தடாகத் தெழும் தியஎண்ணங்களென்னும் ஊற்றுக்கண்களாற்பெருக்கெடுத்து நிரம்பியுள்ள விடயமெனும் விடவறலில், இப்பெரியாரின் புண்யசரிதாமிர்தவர்ஷத்தினை விரவச்செய்து அதனாற் பெருநலன் பெறலாமென்னும் அருமவாத்தூண்ட எனதிதயவனசத்துறை இறைவியின்றிருவருட்டுணைகொண்டு நாயேனது பரமாசாரியராகிய இத்தண்ணளிப்பெருந்தகையின் புகழ்மிகுசரிதையை, அவ்விறைவரின்பேரருள்பெற்ற ஸ்ரீஇராமநுஜய்யா என்னும் ஸ்ரீகுஞ்சிதபாதசுவாமிகள் எழுதிவைத்தகுறிப்புக்கொண்டும், ஸ்ரீஸ்வாமிகளின் மாணுக்கர்களாய ஸ்ரீசுப்பராயசுவாமிகள் ஸ்ரீசெல்லப்பசுவாமிகள் முதலியபெரியார்பாற் பல்கால்கேட்டிருந்த கேள்வி கொண்டும் எனது சிற்றறிவிற்கெட்டியவரை யெழுதியுள்ளேன். எனது புல்லியதன்மை நோக்காது, சரிதநாயகரான பெரியாரின் பெருமையெண்ணி உலகமேற்குமென்னுந் துணிவுடையேன்.

பிழையுளதேல் உலகம் பொறுக்க.

பரஞ்ஜோதி.

ஸ்ரீ பொன்னம்பலஸ்வாமிகள் மடாலயம்,

சிதம்பரம்.




